தும், சிரசும் பல்லும் உண்டாகின்றன. ஏழாமாதத்தில் ஆண்மகவாயின் ஆண்குறியும், பெண்மகவாயின் பெண்குறியும் உண்டாகின்றன. எட்டாமாதத்தில் எல்லா அவயவங்களும், உண்டாகிச் சீவனும்பிரவேசிக்கின்றான், ஒன்பதாமாதத்தில்சீவன்சுழுமுனையென்னும்நாடியின்மூலத்திலிருந்து பூர்வசன்மகருமங்களைநினைத்துச் சன்மம் வந்ததைக் குறித்துத் துக்கித்துப் பத்தாமாதத்தில் பிறக்கின்றான்,

கருடா ! பஞ்சபூதாத்மகவாகிய தேகம்பஞ்சேந்திரியங்களுற்றும், பத்துநாடிகளால்அலங்கரிக்கப்பட்டும், பிராண, அபான, வியான,உதான,சமான, நாக, கூர்ம, கிருகர, தேவதத்த,தனஞ்சயனென்னும் பத்துவாயுக்களோடு கூடியும்இராநின்றது. அல்லதுஉம்அச்சரீரம் சுக்கிலம்,எலும்பு, நீர்,மயிர்அரத்தம்என்னும் ஆறுகோசமுடையதாகியும இராநின்றது. நரம்புகளினால்கட்டப்பட்டிருக்கும் ஸ்தூலசரீரத்தில் தோலும்எலும்பும் மயிரும்மாம்சமும் உகிரும், பிருதிவினதுகுணமாகின்றன. வாயில் உண்டாகின்றநீரும்மூத்திரமும், சுக்கிலமும், ஊநீரும்புண்ணீரும, அப்புவினது குணமாகின்றன. பசியும்தாகமும்-நித்திரையும் சோம்பலும் காந்தியும் தேயுவினது குணமாகின்றன. இச்சையும்-கோபமும்- வெட்கமும்- பயமும்- கோபமும்- அங்குமிங்குமோடுதலும்- சுழலுதலும் கைகாலமடங்குதலும்- நீட்டுதலும்ஒருவினைசெய்யாமலேயிருத்தலும், வாயுவினதுகுணமாகின்றன. சப்தமும்எண்ணமும்கேள்வியும்- கம்பீரமும்-சத்தியமும்-ஆகாயத்தினதுகுணமாகின்றன. காதும்- கண்ணும்-மூக்கும்- நாவும்தொக்கு மாகிய ஐந்தும் ஞானேந்திரியங்களாகும், இடைபிங்கலை-சுழுமுனை-என்னும்மூன்றுபெரியநாடிகளும், காந்தாரி- கஜஜிம்மை-பூஷை-யச்சு- அலாபு-குகு-விசாகினி என்னும் ஏழுநாடிகளும் சரீரத்திலமுக்கிய நாடிக ளாகின்றன. ஜீவன் உண்ணும்போது முதலியவற்றை மேற்சொன்ன வாயுவே அந்தந்த இடங்களில் சேர்க்கின்ற வயிற்றில் அக்கினிக்குமேல் புனலும் அப்புனலுக்குமேல் அன்னமும் இருக்கின்றன, அவ்வக்கினியை வாயுவூதிவிருத்திசெய்யாநின்றது. சரீரமானதுமூன்றரைக்கோடி ரோமங்களும் முப்பத்திரண்டுபற்களும் இருபஃதுஉகிர்களும், இருபத்தேழுகோடி தலைமயிர்களும்,

ஆயிரம்பலம்தசையும், நூறுபலம் இரத்தமும், பத்துப்பலம்மேதகம் பத்துப்பலம்தொக்கும். பன்னிரண்டுபலம்மச்சையும் மூன்றுபலமமுக்கியஇரத்தமும்-சபமும மலமும்-மூத்திரமும-கூடிமுடிந்திராநின்றது- அண்டத்தி லுள்ளவையெல்லாம தேகத்திலிருக்கின்றன உள்ளங்கால அதலமென்றும, கணைக்கால்விதலமென்றும்முழந்தாள் சுதலமென்றும், அதற்குமேல் நிதலமென்றும, ஊருதலாதலமென்றும்முக்யம் ரசாதலமென்றும, இடைபாதாளமென்றும, நாபிபூலோகமெனறும,வயிறுபுவர்லோகமென்றும, இருதயம சுவர்க்கலோகமென்றும, தோள்மகோலோக மென்றும, முகம்ஜனோலோகமென்றும, நெற்றிதபோலோக மென்றும, சிரசுசத்தியலோகமெனறும,சொல்லப்படும, திரிகோணம மேருகிரியென்றும்கீழ்க்கோணமமந்தரபருவதமென்றும், அக்கோணத்துக்கு வலப்பக்கம கைலாய மென்றும், இடப்பக்கம இமாசலமென்றும், மேற்பாகம நிஷேதபருவத மென்றும, தென்பாகம கந்தமாதனமென்றும இடதுஉளளங்கையிலுள்ளரேகைவருணபருவதமென்றும சொல்லப்படுமெலும்பு நாவலந்தீவென்றும, மேதசு சாகத்தீவு என்றும, தசைகுசைத்தீவு என்றும, நரம்புகிரௌஞ்சதீவுஎன்றும, தொக்குசால்மலித்திவு என்றுமயிர்த்திரள் பிலட்சத்திவுஎன்றும, உகிர்புஷ்கரத்திவுஎன்றும், சொல்லப்படும, மூத்திரம உப்புவேலையென்றும, நீர்பாற்கடலென்றும கபம்சுராசிந்துவென்றும, மசசைநெய்ச்சமுத்திரமென்றும, வாய் நீர கருப்பஞ்சகடலென்றும், இரத்தம தயிர்வேலை யென்றும, வாயிலுண்டாகும மதுரப்புனல்சுத்தோதகசிந்துவென்றுமசொல்லப்படும, சரீரத்தில்இரண்டு சக்கரங்களுள் அவற்றில் நாதசக்கரத்தில்சூரியனும, பிந்துசக்கரத்தில்சந்திரனும நேத்திரங்களில் அங்காரகனும, இருதயத்தில் புதனும வாக்கில்சுரகுருவும்சுக்கிலத்தில்சுக்கிரனும, நாபியில்சனியும், முகத்தில் ராகுவும, காலில்கேதுவும. இருக்கின்றனர் ஏ கருடா ! மனிதனுடைய சரீரத்திலே பதினான்குலோகங்களும, சப்தகுலசலங்களும, தீவுகளும, நவக்கிரகங்களும, இராநின்ற வகையைச் சொன்னோம சிவன் கருப்பவாசஞ்செய்யும்போதுதானேஅச்சீவனுக்குஆயுசுஇவ்வளவென்றும. இன்னவிதத்தை இவ்வளவென்றும். போக்குமயோ

கமும் இவ்வளவென்றும், இன்னகாலத்தில் இன்னவிதமாய்மரண முண்டாகத்தக்கதென்றும், பூர்வகருமத்தை யனுசரித்துப்பிரம ன்விதிக்கின்றனன். ஆகையாலே தேககாயுளும் உயர்ந்தவித்தை யும்- போகமும்- யோகமும்- மற்றயாவும், மறுசன்மத்தில் ஒருவ னெய்தும் பொருட்டுச் சீவன் நற்கருமங்கள் செய்தல்வேண்டுமெ ன்று சாஸ்திரம் சாற்றுகின்றது. சீவன் பூர்வசன்மத்திற் செய்தக ருமபலனையே மறுசன்மத்தில் அடைகின்றனன் என்பதில் ஐய ப்பாடு சிறிதும் இல்லை கருடா! உலகநன்மையின்பொருட்டு நின க்கு யாவும் புகன்றோம். இன்னும் வினவுவது உளதேல் அதனையும் செப்புகின்றோம் என்று திருவாய்மலர்ந் தருளினன்.

இருபதாம் அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீராமதாசர்கள் திருவடிகளே சரணம்.



# இருபத்தொன்றும் அத்தியாயம்



சூதர் சௌனகாதி மகருஷிகளை நோக்கி, ஸ்ரீஹரிதாசர்களே! பகவான் இங்ஙனம் செப்பலும் மேதகவுருவுடைய கருடபகவான் கண்ணனைத்தொழுது, ஏ சர்வசுவாமி! யமபுரி யாண்டையது? அப் புரிக்குச் செல்லும் மார்க்கத்தின் பெற்றிமையை அடியேனுக்கு மீ ண்டும் விஸ்தாரமாய்ச் சாதித்தருளவேண்டும் என்று பிரார்த்தி த்தலும், அயனரனுக்கரிய எம்பிரான், கலுழனைப் பார்த்து, வை னதேயா! முன்னமே அதன் பெற்றிமையை நவின்றிருக்கின்றோ ம், நீ வினவினமையால், எஞ்சியவற்றை இப்போது புகலுகின்றோ ம், கேட்டி. நமன்புரிக்குச் செல்லும் மார்க்கத்தில் சிலபாகம் உருக இவிட்ட செம்புபோலக் காந்திக்கொண்டிராநின்றன. சிலபாகம் அண்டை முள்களாலும், தீக்கொள்ளிகளாலும், நிறைந்திராநி ன்றன. சிலபாகத்தில் பொறுக்கவொண்ணாத குளிர் இராநின்றது! பூலோகத்திற்கும் யமலோகத்திற்கும், எண்பத்தாறாயிரங் காத வழியுளவதன்று முன்னமே சொன்னோமே! அத்தனை காதவழி

யிலும், பாபஞ்செய்த சீவனுக்கு மரத்தினிழலும். பருகநீரும், கி
திதுகிடைக்கா பாபிகளுக்கு யமலோகமும் அதற்குச்செல்லும
மார்க்கமுமமிக்ககொடுமையாகவே இரகின்றன ஓ கருடா! இனி
யமலோகத்தின் தன்மையைச்சொல்லுகின்றோம். தென்றிசைக்
கும், நிருதிதிசைக்கும், நடுவிலயமபுரி வச்சிரமயமாயும, தேவர்
அசுரர்முதலியோரால் சிதைக்கத்தகாததாயுமஇராகின்றது. அ
ப்பட்டணத்து சதுரமாய் நூறுயோசனை விஸ்தாரமுள்ளதா
யும், இருபத்தைந்துயோசனையுயர முள்ளதாயும், அநேகசாளர
ஙகள் உடையதாயும், துகிற்கொடிகளாலும, முத்துக்கோவைக
ளாலும, தோரணஙகளாலும அலங்கரிக்கப் பட்டதாயும, சுவர்
ணமயமாயும், தர்மராசனுடைய அரண்மனை இருக்கின்றது. அந்
த அரண்மனையுள் பத்துயோசனை அகல நீளமுள்ளதாயும், அ
நேக ஆயிரம வைரத் தூண்கள் உற்றதாயும் சைத்திய சௌரப்
ப முள்ள மென்காற்று இயங்குவதாயும எப்போதுமஆடலும
பாடலும உடையதாயுமஒருதிவ்வியமண்டபம இராகின்றது, அ
மமண்டபத்தில் தூதர்கள கரமகுவித்து ஓர்புறமநிற்கவும ரோக
ஙகளெல்லாம கோரரூபத்தோடு அவ்வாறே ஒருபுடைநிற்கவும
கண்டவர அஞ்சுமபடியாகிய ரூபத்தோடுமஉவப்போடுமசமன்வீ
ற்றிருக்கின்றனன். அவன் வீற்றிருக்கும் அமமண்டபத்தின் ப
க்கத்தில் இருபத்தைந்து யோசனையகல நீளமும பத்துயோசனை
உயரமும உள்ளதாய் பல்விதஅலங்காரமுடையதாய் சித்திர கு
ப்த னுடைய அரண்மனை யிருக்கின்றது. அந்தமனையில் ஒருதி
வவியமண்டபத்தில் சித்திரக்குப்தன் வீற்றிருந்து சமஸ்தசீவர்
கள் செய்யும்பாபபுண்ணியங்களைச் சிறிதும விடாமல்கணக் கெ
ழுது கின்றான் அவன்எழுதுவதில் சிறிதுமபிசகும உண்டாகாது
அசசித்திரகுப்தனுடைய அரண்மனைக்குக் கிழ்ப்புறத்தல்ல சு
ரத்துர்கும், தென் பக்கத்தில் சூலையோடு வசூரிக்கும், மேற்பக்
கத்தில் காலபாசத்தோடு அசீர்ணத்துக்கும, அருசிக்கும், வட
பக்கத்தில்வயிற்றுவலிக்கும, வடகிழக்கில்தலைவலிக்கும, தென்
கிழக்கில் மயக்கத்துக்கும தென் மேற்கில் அதிசாரத்துக்கும,
வட மேற்கில் சன்னிக்கும கிருகங்கள்இருக்கின்றன. அந்தரோ
கஙக ளெல்லாம யமனுடைய உத்தரவை எதிர் பார்த்துக் கொ
ண்டு அமமனை களில் வசிக்கின்றன.

ஏ கருடா! அவ்யமனுடைய அரண்மனைக்குத் தென்பக்கத்தில் பாபம்செய்தசேதநர்களைத் தூதர்கள் பலவிதமாய் இம்சிக்கின்றார்கள் சிலரை உலக்கையால் புடைக்கின்றனர். சிலரை ஆயுதங்களினால் சிதைக்கின்றனர். சிலரைச்சுரிகையால்சீவுகின்றனர். சிலரைச்செக்கில்போட்டு அரைக்கின்றனர் சிலரை இருப்புச சலாகையிற் கோத்துப்பெருந்தழலில வாட்டுகின்றனர். வைனதேயா! ஒரு ஆண்பாவையும், ஒரு பெணபாவையும, செம்பினால்செய்யப்பட்டு அக்கினியால் எப்போதும்தப்தமாயிருக்கின்றன. தூதர்கள்பரஸ்திரீ கமனமசெய்த ஜீவர்களைநோக்கிப் பாபிகாள் () தருமமும தானமும பாராமற்பிறர்மனைவியரைப் புணர்ந்ததற்குவந்தபயன் இஃதெனறு அதட்டிச்சொல்லி அப்பெண்பாவையோடு ஒன்றுசேர்ப்பர் பரபுருஷனோடு சேர்ந்த ஸ்திரீகளையும், அவ்வாண்பாவையோடு அங்ஙனமேசேர்ப்பர் விநதை புத்திரா! புருஷன் தனதுஸ்திரீயை யன்றிப்பரஸ்திரீயைப் புணர்வதற்கும், ஸ்திரீ தனது புருஷனையன்றிப்பரபுருஷனைக்கூடுவதற்கும், யமலோகத்தில் உளதாகியதண்டனையைப்பாராய் இங்ஙனமகொடிய தண்டனையுளதாயிருக்கவும, ஸ்திரீபுருஷர்களில் நல்லொழுக்கத்தில் நிற்போரைகண்டால் அரிதாயிருக்கின்றதே. சிலரைக்கரும்பைப்போல ஆலையில்கொடுக்கின்றார்கள் சிலரைநரகங்களில் தள்ளிப்பாதாளங்காறும அழுத்துகின்றார்கள் கடன்வாங்கி மீண்டும கொடாதசிலரைக்கொடுத்தவனுக்குக்கடனைக்கொடாமல், வண்கண்மைபேசினீரோ என்றுமுனிந்துபுடைக்கின்றனர். பாபிகள்படுந்துயரை விரித்துச் சொல்லுதலால் பயனென்ன? இன்னான்தருமிஷ்டன், இன்னான் அதருமிஷ்டன், இன்னான்சுவர்க்கமபுகுகின்றவன் இன்னான நிரயமபுகுகின்றவன் என்றுஅவரவர் ஒழுக்கத்தாலே உணரலாகுமே. தருமம செய்தவனே சுவர்க்கமபுகுவானென்பது திண்ணமாகலால்யாவரும் தருமமே செய்தல்வேண்டும என்றுகூறிப்பின்னும அருளுகின்றனன்

இருபத்தொன்றும் அத்தியாயம் - முற்றிற்று.

ஸ்ரீ ராமதாசர்கள் திருவடிகளே சரணம்.

# இருபத்திரண்டாம் அத்தியாயம்

---

சூதர் மகாமுனிவர்களே! கேண்மின் அகாரவாச்சியன்வேதவுருவனைப்பார்த்துக் கருடா! சிலதருமங்களைச்சொல்லுகின்றும கேண்மோ மானிடர்கிருதயுகத்தில் மாதவம செய்தல் உத்தமமாயது திரேதாயுகத்தில தியானம்செய்தல உத்தமமாயது. துவாபரயுகத்தில் யாகாதிகள்செய்தல் உத்தமமாயது. கலியுகத்தில் தானம்செய்தலே உத்தமமாயது இல்லறத்திலிருக்கின்றவனுக்கு எந்தயுகங்களிலும யாகாதி கருமங்கள் செய்தலும, கோயில் குளங்கள் சத்திரம- தோட்டமுதலியவற்றை உண்டாக்கித்தருமம்செய்தலும அதிதிபாராதனம செய்தலுமே உரியவாகும இல்லறத்திலிருக்கின்றவன் தனது தாயாதிகளில யாவேனும மரித்தால் அவனைக்குறித்துத் தருப்பணம செய்தல்வேண்டும மாய்ந்தவன் அப்புனலைப்பெற்று மகிழ்கின்றான். மூன்று சிறுகற்களை கயிற்றினால்கட்டி நாற்சந்தியில் இறந்ததினமுதல் மூன்றுநாள் இரவில்எரிதலவேண்டும. சஞ்சயனம்செய்தபின்பு தாயத்தார் எல்லாருமமாண்டவனுக்குத் தருப்பணம்செய்தல்வேண்டும. முதலமூன்றுவருணத்தாராகிய பிரம-க்ஷத்திரிய- வைசியருக்குச் சூத்திரன தருப்பணஞ்செய்யலாம பிரமக்ஷத்திரியருக்கு வைசியன்செய்யலாம. க்ஷத்திரியன் பிராமணனுக்குச் செயயலாம பிராமணன்தன்மரபோர்க்கன்றி மற்றகுலத்தாருக்கொன்றும்செய்யலாகாது, சூத்திரசவத்தோடு பிராமணன்சுடுகாட்டுக்குப்போனால், அப்பார்ப்பானுக்கு மூன்று நாளைக்கு ஆசௌசமுண்டு, மூன்றுநாள் கழிந்தபின்னர் அவ்விப்பிரமன் காவேரிஸ்நானம்செய்து சுத்தனாதல்வேண்டும. மாய்ந்தவனுக்குக் கருமம செய்கின்றவன பஞ்சணையில் சயனிக்கலாகாது இறந்தவனுடைய நற்குணங்களை எப்போதும மிகுத்துரைத்தல்வேண்டும. யமனைக்குறித்தும ஸ்தோத்திரம்செய்தல்வேண்டும. பத்துநாட்களில்போடப்படும பிண்டங்களாலே துஞ்சினவனுக்குச்சரீரமுண்டாகின்றமையால், பத்துநாட்கிரியையுமதவிறாதுசெய்தல்வேண்டும. பத்துநாட்கிரியை செய்யாவிடின் மாய்ந்தவன் சரீரம்

பெருமல்வருந்துவன். தனுர்வேத முணர்ந்த ஒருவில்லாளன்குறிவைத்து வாளியெய்வானேல், அவ்வாளி அக்குறியில்பிழையாது தைக்குமாறுபோலக் கலைகளுணர்ந்த சற்புத்திரன், மரித்த தாய்தந்தையரைக்குறித்துச் செய்யும் கருமபலன் அவரைத்தவிராமல் அடையும், மரித்தசீவன் மூனறுநாள் நீரிலும், மூன்றுநாள் அகனியிலும், மூன்றுநாள் ஆகாயத்திலும், ஒருநாள் கிருகத்திலும், வசிப்பன். முதல்நாளிலும், மூன்றானாளிலும், ஐந்தாநாளிலும், ஏழாநாளிலும், ஒன்பதாம்நாளிலும், பதினொன்றாநாளிலும், நவசிராத்தம்செய்தல்வேண்டும். முதல்நாளில் எந்த இடத்தில் தருப்பணமுதலியவைசெய்யப்பட்டனவோ அந்தஇடத்திலதானே பத்துநாளும் செய்தல்வேண்டும். பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரரில் எக்குலத்தாருக்கு எத்தனைநாள் ஆசௌசம் விதிககப்பட்டதோ அத்தனை நாளும், பிண்டதருப்பணம் அவசியம்செய்தல்வேண்டும். எந்தத்திதியில் மரிக்கின்றனே? அந்தத் திதியில் மாசிகம் செய்தலவேணடும். பதினொன்றுநாள் பலகாரத்தோடு சோறமைத்து நாற்சந்தியில் கொட்டி, ஸ்நானம் செய்தல்வேண்டும. அதிகவருத்தப்பட்டு ஒருவன்மரிப்பனேல அவனைக் குறித்து ஏகோதிஷ்ட சிராத்தம் விசேஷமாயச் செய்யப்படுமாயின் அவன் வருத்தம்நீங்கி இன்புறுவன், அந்த ஏகோதிஷ்ட சிராத்தம் க்ஷத்திரியன் பன்னிரண்டாநாளிலும், வைசியன் பதினைந்தா நாளிலும செயதல் வேண்டும். தாய் தந்தையர் மரிப்பினும், மகவு பிறப்பினும் சூத்திர குலத்தாருககு ஒரு மாதம் வரையினும் ஆசௌசம் உணடு அரையாதம் உளதெனபதும் ஒருபட்சமுண்டு. சூத்திரன் பதினைந்தா நாளுக்கு அப்புறம் ஏகோதிஷ்டம் செய்தல் வேண்டும். ஒருவன் மரித்தால் பத்துநாள் திட்டுடைய அவனுடைய தாயத்தான சருமம் முடிந்தபின்பு மூன்று மாதத்திற் குட்பட்டு எப்போது கேட்பினும் அத்தாயத்தானுக்கு மூன்றுதினம் சூதகம் உண்டு. மூன்றுமாதத்திற்குமேல் ஆறுமாதத்திற் குட்பட்டுக் கேட்பனேல்தொண்ணூறு நாழிகையுண்டு. ஆறுமாதத்திற்குமேல் ஒரு வருஷத்திற்குள் கேட்பனேல ஒருதினமாத்திரம்உண்டு. வருடம் முடிந்தபின்பு கேட்பனேல் கேட்ட உடனே ஸ்நானம்மாத்திரம் செய்தல் வேண்டும், இவ்விதி எல்லா வருணங்களுக்கும்பொதுவாகும்.

வீநாயக ? சய்யாதானம் செய்ய வேண்டுமென்று, முன்னமே ஓதினேயே? எந்தப்புருஷனும் அத்தானத்தைத் தனதுலகையாலேயேசெய்தல் வேண்டும். நல்லமரத்தில் கட்டில்செய்து சொன்னத்தாலும், வெள்ளியாலும் பூண்கள்கட்டி, முத்துமாலைகளாலும், நறுமலர்த்தொடையல்களாலும், அக்கட்டிலேஅலங்கரித்துப் பாயல்விரித்துத் தீபமும். சந்தனமும்- புஷ்பமும்-தாம்பூலமும் பின்னும் நறுநாற்றமுடைய மற்றையவும், நீருடன்செம்புஸ்தாலியும், அலங்காரார்த்தமாயும், லீலார்த்தமாயும்ஸ்திரீபுருஷர்களுக்கு வேண்டியவும், அக்கட்டிலில்வைத்து நவக்கிரகங்களைப் பூசித்துச்சிவன்முதலாகிய தேவர்களும் பார்வதிமுதலாகியதேவஸ்திரீகளும், லட்சுமிநாராயணனும் இந்தச்சய்யாதானத்தால் திருப்தியடைதல் வேண்டுமென்று சொல்லி, யோக்கியனாயும், குடும்பியாயுமுள்ள உபாத்தியாயனுக்குத் தானம்செய்து அவனை வலம்வந்து தண்டம்சமர்பித்தல் வேண்டும் என்றருளினன்.

இருபத்திரண்டாம் அத்தியாயம் - முற்றிற்று.

ஸ்ரீராமதாசர்கள் திருவடிகளே சரணம்,



# இருபத்திமூன்றும் அத்தியாயம்



சூதபுராணிகர் மாதவங்களை நோக்கிமுனிசிரேஷ்டர்களே! கேண்மின். பின்னாப்பெரிய திருவடி புராரிவணங்கும் முராரியைத்தொழுது ஸ்ரீசர்வேசா! தாயைப்பெற்றவளும்அவளைப்பெற்றவளும் அவளைப்பெற்றவளும், தந்தையைப்பெற்றவனும், அவனைப்பெற்றவனும் அவனைப்பெற்றவனும், உயிரோடிருக்குங்கால் தாயேனும் தந்தையேனும் இறப்பின், புத்திரன் எங்ஙம் பிண்டம் சேர்த்தலவேண்டும், நவின்றருளுக வெனலும், ஸ்ரீதரமூர்த்தி வைனதேயா! தாய் தலைமுறையிலும், தந்தை தலைமுறையிலும், உயிரோடிருப்பவர்களுக்கு மேலேமூன்று தலைமுறைப்

பிதிரர்கள் பிண்டத்தோடு இறந்தவர் பிண்டத்தைச் சேர்த்தல் வேண்டும். பிண்டமுன்றுப்பிதிரர் மூன்றுபேர் தியாசகர் மூன்றுபேர், லேபகர் மூன்றுபேர் பிண்டம்போடும் பந்தியில் வருவோன் ஒருவன் இங்ஙனம் தந்தைமரபில் பத்துப்பேர்களும், தாயமரபில் பத்துப்போகளும் உளர் ஒருவன்மரித்துப்பிதிரரோடு சேர்த்தலும், நான்காம்பாட்டன, முதல் தியாசகனுகின்றான்மூன்றாம் திபாசகன், முதல்லேபகனுகின்றான் மூன்றாம்லேபகன் பந்தியில் வருவோனுகின்றான் பந்தியில் வருவோன், வாராமல ஒழிக்கிறன் புத்திரன் சிராத்தம்செய்தனதந்தை சந்தோஷித்து அப் புத்திரனுக்குப் புத்திரன கொடுக்கின்றான். பாட்டன்கோ முதலிய பொருள்கள்கொடுக்கின்றான் சிராத்தம்செய்தலில் பிதிரர்களுக்குத் திருப்தியுண்டாத லனறிசெய்கின்றவனுக்கும் மிக்க பலனுண்டு. அவிட்டம் முதல்ரேவதிவரையிலுள்ள ஐந்து நாட்கள் சிரேஷ்டமானவை யல்ல. அவ்வைந்து நட்சத்திரங்களில் மரிக்கின்றவனுக்கு உடனே சமஸ்காரமுதலிப கிருத்தியங்கள் செய்யலாகா. அந்த நட்சத்திரங்கள் கழிந்தபின்பேசெய்தல்வேண்டும் இவ்விதியை ஒருபக்ஷமாகக்கொள்க. உயிர் நீங்கியபின் புதேகத்தைவைத்திருக்கச்சிறிதும் அமையாதாகலால், உடனே சமஸ்காரம்செய்தலேவேண்டும். தனிஷ்டா பஞ்சகத்தில் இறந்த தோஷநிவர்த்தியின் பொருட்டுச் சாஸ்திரத்தில சொலலியபடி கிலகருமம் அதிகமாய்ச்செயதல்வேண்டும். மேற்சொன்ன ஐந்துநட்சத்திரங்களிலும், இறந்தவர் நற்கதியடையார். ஆதலால் எள்ளுகோவும் இரணியமுயசெய்யும், தானம்கொடுத்தல்வேண்டும் தனிஷ்டாபஞ்சகத்தில் மாய்ந்தவருக்குச்சாஸ்திரம்சொல்லியபடி செய்யாவிடின்கருமம்செய்யும் கருத்தா துன்பமடையவன் பிரேதத்தை யுத்தேசித்துச்செய்யப்படும் சிராத்தத்தில், பிராமணர் ஆசிர்வதித்தலும்; அன்னவர் க்ஷேமம்கோருதலும இரட்டைக் குசையும் பணவமும் ஓமமும் எச்சிலேகாய் நுகரலாகாதென்றவிதியும் சேஷத்தையுண்ணலும், விகாரமும் ஸ்வதாக என்கிற சப்தமும், பிதிரசப்தமும் உடன் சொல்லுதலும் ஆவாகனமும் நமஸ்காரமும எல்லேவரையில் பின்சொல்லுதலும், வலமவருதலும் சம்பிரதாயப்படிபுண்டரம் தரித்தலும், அக்கினியில்பூர்ணுகுதிசெய்தலும், ஏகோதிஷ்டமும ஆகியபதினெட்டும் வேண்டு

வதில்லை. அறியாமல் இவற்றைசெய்தவன் நரகம்எய்துவன் ஒக ருடாமரித்தவுடனே கால்கைகளைக் கட்டல்வேண்டும் உறவின ரெலலாரும் சவத்தண்டையிலேயிருத்தல் வேண்டும். ஒருகிராம த்தில் சவம்கிடந்தால் அதுதகனம் செய்யப்படும்வரையினும், அக்கிராமத்தில் உள்ளயாவரும் சோறும், நீரும உண்ணலாகாது சோறும் நீருமஉண்டால் மாமிசமுண்டதோஷமும, இரத்தம பருகினதோஷம் அடைவர். தாமபூலதாரணம் செய்யக்கூடாது. தந்தசுத்தியும செய்யலாகாது இரவிலபிணங்கிடந்தால் ஸ்திரீ புருஷர் புணரலாகாது என்றருளினன்.

இருபத்துமூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீராம தாசர்கள திருவடிகளே சரணம்.

——o——

# இருபத்துநான்காம் அத்தியாயம்.

ஸ்ரீவேதவியாசா மாணாக்கர்நைமிசாரணியவாசிகளே! கருடபகவான் மறைமுதலியைத்தொழுது எநதையே ? பிராயோபவேசமசெய்தல் யாதுகாரணத்தால சிரேஷ்டமாயது? பிறநதுவளாந்துவாழ்ந்தமனையை நீககிப்புண்ணியட் சேததிரத்துக்குப் போய, அவ்விடததில மரிததால அதற்குபபயன்யாது? தீாத்தயாத்திரை செய்யப்புரப்பட்டு மார்க்கத்தில மாய்வனேல், அவனுககுபலன் என்னை? நாளெல்லாம் தீர்ததயாத்திரை செய்கின்றவனுககுப் பலன் என்னை? சந்நியாசச்சிரமம் பெற்றோன் அவ்வாச்சிரமத்துக்குறிய ஒழுக்கத்தினின்று தவறுவனேல் எக்கதியடைவன்? இவற்றையெல்லாம சவிஸ்தாரமாய்ச் சாற்றியருளவேண்டுமென்று பிரார்த்தித்தலும, பரமபதி வைனதேயா! யாவனொருவன் ஆகார வியவகாரம ஒன்றும செய்யாமல், நியமத்தோடு தருப்பசயனம செய்து ஏம்மைத்தியானித்தவாரே மரிக்

கின்றானே? அவன் நம்முலகு சாரவன். அதனாலே அப்பிரா யோபவேசம் ஏற்றமுடைய தாயிற்று ஒருவன் பிராயோப வேசம் செய்த நாளை எத்தனையோ? அத்தனை நாள் களுக்கு ம், நாளொன்றுக்கு ஒருயாகபலன் அவனுக்கு உண்டாகும் மகா ரோகங்களால் வருந்தப்பட்டு இனி உயிர்வாழ்க்கை வேணுமெ தில்லையென்று பிராயோபவேசம் செய்து யெம்மைத் தியானித்து மரிக்கின்றவனும், நல்லுலகேயடைவன் மரிப்பதற்குப்பிராயோ பவேசம்செய்து நடுவில்எழுந்து இல்வாழ்க்கையை விரும்புவானே ல். அவன் பிராமணர்மூலமாய்ப் பிராயச்சித்தங்கள் செய்துகொ ண்டு பின்பு தருமமாகநத்திலே ஒழுகுதல் வேண்டும். சந்நியாச ம் செய்துகொண்டு நியமத்தோடிருந்து மரித்தவனுக்கு அவன் அ வ்வாசிரமம் பெற்றநாளமுதல் மரித்ததினவரையிலுமுள்ள நா ள்களுக்கு நாளொன்றுக்கு இரண்டியாகபலன் உண்டாகும் பிணி யால துன்பப்பட்டு மரணகாலம் அடுத்ததென்று எண்ணிச் சந் நியாசாச்சிரமம் பெற்றுப்பின்பு பிணிநீங்கிப்பிழைத்துஇல்வாழ் க்கையில் உடன்படுவனேல் அவன்மகாரோகம் அடைவான். அ வனினும்பாபி யொருவனும்இலன். அவனைபொருவர் பார்க்கலு மாகாது மனைமனைவிமககள்முதலியோரைநெடுங்காலப்பிரிந்து, நெடுந்தூரம்சென்று தீர்த்தயாத்திரை செய்கின்றவனுக்குப்பிர மாதிதேவரெல்லாரும் வேண்டியவற்றைக்கொடுக்கின்றனர் தி வ்யதேசயாத்திரையை உத்தேசித்துச்சென்று விதிபால வழியி ல்மரிப்பனேல, அவன்சுவர்க்கம்புகுவான் சந்நியாசிகளையும், யா த்திரை செய்வோர்களையும், தேவரெல்லாரும் காப்பாற்றுகின்ற னா. விசேஷமாய் விஷ்ணுகணங்களே அவர்களை ரக்ஷிக்கின்றார் கள். மரிக்கவேண்டுமென்றே புண்ணியக்ஷேத்திரத்தில் நெடுங் காலம்வசித்துச் சிறிதுதீவினையால், வேறிடத்தில மரிப்பனேல்; அவன்மறுசன்மத்தில் காவேரிதீரத்தில வைதிகபிராமணகுலத் தில்சாவசாஸ்திர சம்பன்னனுயநல்லொழுக்க முடையவனுய்பக வத்பாகவத ஆசாரியபக்தியுடையவனுய்ப்பிறந்து, இறுதியில்நல் லுலகடைவன். இன்னக்ஷேத்திரம்போய்அதிலேமரிப்பேன்என் றும். அதில்மரிக்காமல் மீளேனென்றும, அறங்கரைநாவின் நா ன்மறைமுற்றிய அந்தணர்சந்நிதியில் சங்கற்பம் செய்துகொண்டு

சென்றவன்மீண்டும் மனைக்கண் வருவானேல், அவன் மகாபாபி ஆவன். அவனும் பிராயச்சித்தம் செய்துகொள்ளவேண்டும் மரணகாலம் அணித்தாயது என்பதையறிந்து விஷ்ணுக்ஷேத்திரங்களில் மரிக்கவேண்டுமென்று யாவன்நடக்கின்றானோ! அவன்நடக்கும் அடிகளுக்கெல்லாம், அடியொன்றுக்கு ஒருகோதான பலன் அடைவன் எக்காரணத்தினாலேனும் அயனம்சென்றவன்திரும்பிவருவானேல் அவன்நடந்த அடிகளுக்கு அடியொன்றுக்கு ஒரு கோவைக்கொன்ற தோஷம் அடைவன்கிருகத்தில் ஒருவன் செய்கின்றபாபங்கள் திவ்வியதேசங்களில்பகவத்பாகவதசேவையாலும் தீர்த்தப்பிரசாதங்களாலும் நிவர்த்தியாகும்க்ஷேத்திரங்களில்செய்யும் பாபம் எவற்றாலும்எந்நாளும் நிவர்த்தியாகா.

கருடா! அந்நியருக்கு உதவிபுரிதலினும் தனது தாய்தந்தையருக்கும் உடன் பிறந்தாளுக்கும் உடன்பிறந்தானுக்கும்வேண்டியவற்றைக் கொடுத்தலவிசேடமாம், புத்திரன்தந்தைக்குப் பொருள்முதலியவைகொடுத்தால்உத்தமபிராமணனுக்குக் கொடுத்தால உளதாகும் புண்ணியத்தினும் நூறுபங்கு அதிகம் புண்ணியம்பெறுவன் தாய்க்குக்கொடுத்தால் ஆயிரம்பங்கு அதிகம்பெருவன்சகோதரிக்குக்கொடுத்தால் லட்சம்பங்கு அதிகம்எய்துவன். சகோதரனுக்குக் கொடுத்தால்புண்ணியத்துக்குக் கணக்கேயில்லை, வருந்தித்தேடின் பெற்றபொருளை நல்லவினியோகம்செய்தல்வேண்டும்யாவன்இறத்தலைமறந்து, நிலையில்லாதசரீரத்தைப் போஷித்து ஆடையாபரணங்களால அதனையலங்காரித்துசமுசாரசாகரத்திலேயே முழுகுகின்றானோ! அவனைப் பார்த்து இச்சீவன் திறன இங்ஙன்மோ மானிடசன்மம்பெறறும், கருமத்தால்இவன்நமது கைப்படுவோனே யானென்றுயமன்சிறிக்கின்றான் ஒருத்தியா புருஷனைச் சேர்ந்து பெற்றமகவை அவள் ஆமுடையான் எடுத்து மடியில்வைத்துக் கொஞ்சிக் குலாவும்போது இக்குழந்தையை இவனோபெற்றான் நம்மைப்புணர்ந்துபெற்றவன் வேறொருவனாயிருக்க, அஃதுணராமல், இவன்தான் பெற்றான் போலவும் தனக்குறியது போலவும் கொண்டாடு கின்றானே என்று நினைந்துக் கணவன் குழந்தையோடு குலாவுதலைக்கண்டு மகிழ்வாளெனஎண்ணுமாறு இதழ்பிதுக்கி நகைபுரியும் கள்ளமா

௧ ௲-ம்-அ-ம்-



(காசிக்ஷேத்திரம்)

துபோல பூதேவி யானவள் அளவற்ற நிலையும், கொள்ளக்குறையா நிதியையும் அடைந்தும் தான்உடாதும்உண்ணாதும், பிறர்க்குக் கொடாதும் பொருளீட்டிவைக்கும் மூழுமகனைப் பார்த்து இவனுக்கே யாமுரியேமோ? அஃதுணராதுள்ளது எனது என்கின்றானே என்றுவாயாரச்சிறிப்பாள். பூமியும்மற்றபொருளும் ஒருவனுக்கேஉரியவோ? நமதுநமதுஎன்றுபிதற்றிததிரிந்தோரெல்லாரும் இறுதியில் நீத்தேகினரே என்றுநல்லாற்றில் ஒழுகி உயிர்களுக்கு உதவிசெய்து பூதானம்செய்கின்றவனைப்புவிமகள் நம்மாளுடையான நல்லன. அவனால்நாம் சத்பிராமணன் கையில் கோடுக்கப்பட்டோமேயென்று உவககின்றாள், பூதானம்செய்தவனும் புனலில் மூழ்கியேனும பஞ்சாக்கினி மத்தியிலிருந்தேனும் தவஞ்செய்தவனும், மகங்கள்புரிந்தவனும்யுத்தத்திலபின்வாங்காமல் முன்னின்றவனும இகத்திலும் பரத்திலும உறுதிபெறுவரென் றருளினன்.

இருபத்திநான்காம் அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீராமதாசாகள் திருவடிகளே சரணம்.



# இருபத்தைந்தாம் அத்தியாயம்

——[o]——

சூதமாமுனிவர் நைமிசாரணியவாசிகளே! கருடபகவான் ஆதிமத்தியாந்த ரகிதனாகிய ஸ்ரீமந் நாராயணனைத்தொழுது, சகதீசா! நித்தியசிராத்தம் யாங்ஙனம்புரியத்தக்கது? நவின்றருளுக வெனலும் அறவாழியந்தணன் புள்ளரசனை நோக்கி தார்கூறியா நாள்தோறும்ஒருசத்பிராமணனுககுப்போசனம்செய்வித்து அன்னமும்புனலும் ஒருகடத்தில்நிறைத்து அதனையவ்வேதியனுக்குக் கொடுத்தல்வேண்டும். இந்தநித்தியசிராத்தத்தால மாய்ந்தசீவன்இன்பமடைகின்றனன். அச்சீவனைஒருவருஷம் வரையிலு

ம் வழியில்நடத்திக்கொண்டு யமலோகம்சாரும் தூதரும்அச்சி ராார்த்தத்தால்திருப்தியடைந்து அச்சீவனுக்கு இதம்செய்கின்ற னர். இறந்த பன்னிரண்டாநாள் சங்கற்பப்பூர்வமாய்ப் பன்னிர ண்டு கடங்கள் தானஞ்செய்தலவேண்டும். தரித்திரனாயினும் ஸ்ரீ விஷ்ணுபகவானைக் குறித்துப்பெரிதாய் ஒருகடமும், தருமரா சனைக்குறித்துஒருகடமும் சித்திரகுப்தனைக்குறித்துஒருகடமும் கொடுத்தல் வேண்டுமென்றருளினன். கருடபகவான் பரமாத்து மனை வணங்கிப் பரமபதநாதா! மோக்ஷமும் சுவர்க்கமும் எந்த க்ஷேத்திரங்களில் மரித்தால்கிடைக்கும்? அவ்விரண்டும் எக்கரு மங்களைசசெய்தால் கிடைக்கும்? புகன்றருளுகவென லும் ஸ்ரீவை குண்டநாதன் வைனதேயா அயோத்தியா மதுரா மாயா ○ காசி- காஞ்சி அவந்திகா துவாரகா என்றசப்த புரிகளில் எதிலேனும் ஒன்றில துஞ்சுவோன பிரதிசயஇன்பவீடாகிய நம்முலகுஎய்து கின்றனன். சந்நியாசியாச்சிரமம்பெற்று மரிக்கின்றவனும் ஸ்ரீவி ஷ்ணுபக்திசெய்து மரிக்கின்றவனும் ஸ்ரீராமகிருஷ்ணாதிநாமங் களைப்புகன்றவாரே இறக்கின்றவனும் சாளக்கிராமம் இருக்குமி டத்தில்துஞ்சுகின்றவனும்இன்பவீடடைகின்றனர். திருத்துழா ய் வைதது விருத்திசெய்கின்றவனும், அதற்குப்புனல பாய்ச்சுகி ன்றவனும், பாபம்நீங்கிநல்லுலகடைகின்றனா. கோவுக்கும்பிரா மணனுக்கும், குழந்தைக்கும், ஆபத்துவந்தகாலை தன்னுயிரைவி ட்டாயினும், அவற்றை யாவனரக்ஷிக்கின்றானோ? அவன் இறுதி யில் தேவரெல்லாரும்எதிர்கொள்ளச சுவர்க்கம்சோகின்றான்ஸ்ரீ ரங்கத்திலேனும் காசியிலேனும் குருக்ஷேத்திரத்திலேனும் பி ருகுக்ஷேத்திரத்திலேனும் பிரபாச தீர்த்தத்திலேனும், ஸ்ரீகா ஞ்சியிலேனும், திரிபுஷ்கரத்திலேனும், பூதேஸ்வரத்திலேனும், மாண்டவனவீட்டுலகெய்துகின்றனன். ஏழுஅல்லது எட்டுவ யதுள்ள கன்னிகையை மணம் புரிந்தவனும் வேத சாஸ்திரங்

○ காசி. இப்போதுசிவக்ஷேத்திரம் ஆதியில்விஷ்ணுக்ஷேத்தி ரம், சிவன்பிரமகத்திதோஷத்தால்பீடிக்கப்பட்டுபுவியெங்குந்தி ரிந்து காசிக்ஷேத்திரம்வர. உடனே அம்மகாபாதகம் நீங்க அச்சி வன அப்போது அந்தக்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருந்தஸ்ரீயப் பதியைத்திருவடிதொழுது கைலைமலைசேர்வான் அகல மீண்டும்

அப்பா தகம்வந்து பற்றகபாலிதிரும்பிக் காசியினுட்புகுந்தாஉல கையுண்டுமிழ்ந்த ஒருவனை வணங்கிஉற்றவா றுரைத்துச்சுருதி மூர்த்தி! நீ எழுந்தருளி யிராநின்ற இந்த க்ஷேத்திரத்தை அடி யேனுக்குத்தந்தருள்வையேல் மகாபாதகத்தாலேபீடிக்கப்படா மல்இங்கணிருப்பேனென்று பிரார்த்திக்க, பரமகாருணிக னாகிய பகவான்காசியை அரனுக்குக்கொடுத்துப் பிரயாகையில் எழுந்த ருளினனென்று நாரதியபுராணம்நவிலாநின்றது. பின்புசிலாசிவ னைக்குறித்துத் தவம்புரிந்து முத்திவேண்ட அச்சஞ்சரன் பிரம னைநோக்கி எந்தையே அடியேன் முத்திகொடுக்கும் தெய்வமெ ன்றுஎண்ணி அடியேனைச்சிலர் முத்திகேட்கின்றனர் அவர்களு க்குநான்முத்திகொடுக்க ஒருபாயம் அருளுதியென்று பிரார்த்தி க்கச்சதுமுகன் சம்புவைநோக்கி இராமநாமத்தை யோதிக் காசி யில் இறப்போர்க்கு முத்திகொடுவென்றுஅருள அரன்அது மு தல் அங்ஙனம்முத்திகொடுக்கின்றன னென்று அகத்திய இராம அரசங்கிதை கூறுநின்றது.

கலையுணர்ந்தவனும்-கன்னிகையேனும்-பூமியேனும்-இருக மேனும்கோவேனும்- இரபருவதமேனும் யானையேனும தானங் கொடுததவனும்சுவர்ககமஎய்துவா. கிணற்றையும் நடவாவியை யும், குளத்தையும், தேவாலயத்தையும் புதுக்கினவன் முன்னே அவற்றை யுண்டாக்கினவனும் அதிகம் புண்ணிய மடைந்து வி ண்ணுலகு சார்வன் குசைப் புல்லாலேனும் வீடுகட்டித் தானம் செய்தவன் மூன்றரைக கோடிவருடம் சுவாக்கவாசம்செய்வன். பிராமணருக்குவருஷாசனம் கொடுப்பவனும், சுவாக்கம் எய்து வன் என்றருளினன்.

இருபத்தைந்தாம் அத்தியாயம் - முற்றிற்று.

ஸ்ரீ ராமதாசர்கள் திருவடிகளே சரணம்.

# இருபத்தாறும் அத்தியாயம்



சூதர் ஸ்ரீஹரிதாசாகளே ! பின்னர்வேதவுருவன் சகத்கார ணனைநோக்கி, ஸ்ரீசர்வேசா! ஆசௌசம்இன்னவகையுளவென்று அடியேனுக்குக்கூறியருளவேண்டுமெனலும, ஆதிநாயகன்வீநா யகா ! பிராமணனுக்குப் புத்திரன்பிறந்தாலும விப்பிரன்மாய்ந் தாலும் தாயத்தாாகளுக்குப் பத்துநாள் வரையில்ஆசௌசம் உ ளது ஆசௌசமுடையோர் தேவதாராதனம், ஓமம்முதலியவற் றைச செய்யலாகாது ஆசௌசமுடையோர் வீட்டில்அதுநீங்கு ம் வரையினும் எவரும்உண்ணலாகாது நெருப்பில்விழுந்துஇறந் தவனுக்கும்சிங்கம் முதலியமிருகங்களால் மாய்ந்தவனுககுந்தேசா ந்தரஙகளில் துஞ்சினவனுக்கும் உடனேகருமம்செய்யலாகா தா தலால கிரியைசெய்யத்தொடங்கு நாள்முதல்ஆசௌசம்உண்டா கும். இறந்தானென்றுகேட்டவுடனே ஸ்நானமாத்திரம் செய்த ல்வேண்டும் அரசனுக்கும் தவம்செய்யும் பூசுரனுக்கும மகம்புரி யும் விப்பிரனுககும் அவர்கள் தாயத்தார் இறந்தால்ஆசௌசமி ல்லை. ஒருவனுக்குப் பெண்பிறந்தால் அதன் தாயத்தாருக்குஆ சௌசம இலலை. பெற்றதாய்க்கு மாத்திரம்பத்துநாள் ஆசௌச முளதெனபதும் தநதைக்குஸ்நானமாததிரம் போதுமானதென் பதும் சிலர் அபிப்பிராயமாயிருக்கின்றன. மணக்கோலங்கொண் டிருக்கும் காலத்திலும் யாகம்செய்யும் காலத்திலும் உற்சவத்து ககாகக்கங்கணம் பூண்டகாலத்திலும் ஆசௌசம் நேர்ந்தால் அ வ்வாசௌசம் அத்தொழில்பூண்டாருக்கு அககாலங்களில்இலது ஒருஆசௌசம் நேர்ந்தகாலத்தில் இடையில்வேறொரு ஆசௌச ம வந்தால்முன்னமே வந்த ஆசௌசத்தோடு பின்வந்ததும் தா யத்தார்களுக்கு நிவர்த்தியாகும ஆசௌசம் வருமுன் பிராமண ருக்குக் கொடுப்பனவாய் உத்தேசித்திருந்தவற்றை ஆசௌசம் வந்தபின்பும் கொடுக்கலாம். பிராமணர்களும் வாங்கலாம். கோ க்களையும், பிராமணர் களையும், ஸ்திரீ களையும் ரட்சிக்கும் விஷ யத்திலும், யுத்த பூமியிலும், ஒருவன், உயிர், விடுவனேல். அவ

னைச் சேர்ந்தவர்களுக்கு ஒருநாள் மாத்திரம் ஆசௌசம் உளது ஆசௌசமே யிலது ஸ்நாநம்செய்தலே போதுமானதுஎன்பாரு ம்உளர் என்றுஅருளினன்.

இருபத்தாறாம் அத்தியாயம் - மூற்றிற்று.

ஸ்ரீ ராமதாசாகள் திருவடிகளே சரணம்.

——[0]——

# இருபத்தேழாம் அத்தியாயம்

சூதபுராணிகா மாதவாகளே! கருடபகவான்மாதவனைநோ க்கித்துன்மரணமடைந்தவன் ஏக்கதியடைவன், அவனுக்கு எவ் விதம்கருமம் செய்யத்தக்கது? மொழிந்தருளுகவெனலும், இல க்கும் நாயகன காலால தாண்டியேனும் கழுததில் சுருக்கிட்டுக் கொண்டேனும் விஷமுண்டேனும் அக்கினியில் விழுந்தேனும் வைரப்பொடிஉண்டேனும் மரித்தவனும், பாவைமுக்கிறைலேயு ம் எருதுமுட்டியேனும் சலத்தில்விழுந்தேனும நாய்நரிகள்கடித் தேனும குஷ்டரோகத்தாலேனும், தேகத்திலபுழுஉண்டாகியே னும மரித்தவனும்பிராமணராலேனும், யவனராலேனும் மிலே சசாலேனும் சண்டாளராலேனும்அடிப்பட்டுத்துஞ்சினவனும், இடிவிழுந்தேனும் மரம்விழுநதேனும் மாண்டவனும, சூத்திரஸ் ரீயையேனும் வண்ணாத்தியையேனும் தீண்டிஸ்நானம் செய்யா மல் மாய்ந்தவனும் நற்கெதிபெறுமல் நரகமெய்துவா அங்கன ம்மரித்தவரைச் சார்ந்தவர்களுக்கு ஆசௌசமில்லை. அவர்கள்உட னேகிருத்தியம்செய்ய வேண்டுவதுயில்லை. நாராயணபலி செய்த பின்புகருமம்செய்யலாம்- துன்மரண மடைந்தவன் பிராமண னு யின் ஆறுமாதத்திற்கு அப்புறமும் க்ஷத்திரியனுயின் இரண்டுமா தத்திற் கப்புறமும் வைசியனுயின்பதினைந்து நாளுக்கப்புறமும், சூத்திரனுயின் இறந்தவுடனும், கருமம்செய்யத்தக்கது கங்காதீ ரத்திலேனும் யமுனாதீரத்திலேனும, நைமிசவனத்திலேனும, பு

ஷ்காட்சேத்திரத்திலேனும குள்க்கரையிலேனும, அரசமரத் துநிழலிலேனும், பசுமாட்டுக் கொட்டிலிலேனும், இல்லத்திலே னும, நாராயணபலிசெய்தல் வேண்டும், வேதமந்திரங்களாலே ஸ்ரீவிஷ்ணுபகவானை யாராதித்துஸ்தோத்திரம செய்துதெற்கு முகமா யிருந்துகொண்டு சங்குசக்ரகதாமபரதாரியாயும, நித்தி யனாயும சர்வாந்தரியாமியாயும, திவ்வியமங்களவிக்கிரக அனந்த கல்யாணகுண விஸ்வரூப னாகியும, விளங்காநின்ற ஏ ஸ்வாமி! மரித்தவனுக்கு நற்கதி கொடுத்தல் வேண்டு மென்று அப்ப கவானைத் திரிகரண சுத்தியாப் பிரார்த்தித்துத் தியானித்துப் பத்தி பூர்வமாய்ப் பிராமணருக்குப்போசனம் செய்வித்துத் தா னியதானம்கொடுத்துப் பிண்டதருப்பணமுதலியயாவும்புரிதல் வேண்டும். அங்கனம புரிந்ததினத்துக்கு மறுதினத்தில் சுவர் ணத்தினால் ஸ்ரீவிஷ்ணுபிரதிமையொன்றும், தாமிரத்தினால் உரு த்திரப்பிரதிமையொன்றும, வெள்ளியினால்பிரமப்பிரதிமையொ ன்றும, இரும்பினால் யமப்பிரதிமையொன்றுமசெய்து மேற்கில் ஸ்ரீவிஷ்ணுவையும, கிழக்கில் பிரமனையும, தெற்கில் யமனையும்வ டக்கில் உருத்திரனையு மத்தியில் மரித்தவனையும் வைத்துப்பூசி த்து ஐந்து கும்பங்கள்வைத்து அவற்றில் நவரத்தினங்கள பெ ய்து பூணூலசார்த்தி அலங்கரித்துமேற்கூறியஐந்துதேவர்களை க்குறித்துச் சிரார்த்தமசெய்து பிண்டமவைத்து, எட்டுத்தானங் களும்செய்து செம்புப்பாத்திரத்தில் திலமும இரணியமும்வைத் துத்தானம்கொடுத்து இருக்குவேதமுணர்ந்தவருக்குப் பயிரு டன் பூதானமும எசுர் வேதமோதியவருக்குக்கனறுடன் ஆவு ம, சாமவேத வல்லவருக்குச்சம்பாநெல்லும கொடுத்தல்வேண் டும. முந்நூற்றறுபதுபலாச இலைகாயினால மரித்தவனது சரீ ரம்போல ஒனறு செய்தல் வேணடும.

கருடா! முந்நூற்றறுபது காமபுகளுமவிவரம்சொல்லுகின்ற ம. சிரசுக்குநாற்பதும், கழுத்துக்குப்பததும், மார்புக்கு இருப தும், வயிற்றுக்கு இருபதும இரண்டுகைக்கு நூறும்இடைக்கு இருபதும தொடைகளுக்கு நூறும், முழந்தாள்களுக்கு முப்ப தும் ஆண்குறிக்கு நாலும விருஷணங்களுக்கு ஆறும் கால்களு

க்குப் பத்தும வைத்து, மீண்டும் சிரசுக்குத் தேஙகாயும் முகத் துககுப்பஞ்சரத்நமும் நாவுக்குவாழைப்பழமும், மூக்கிற்குஎட் பூவும், காதுக்குஎள்ளும், நரம்புக்குத்தாமரைத்தண்டும், தசைக்கு அன்னமும். இரத்தத்துக்குத்தேனும், மயிர்களுக்குச் சவரியும், தோலுக்குக்கிருஷ்ணாஜினமும், ஸ்தனபிரதேசத்துக்குக்குன்றியும், நாபிக்குத் தாமரைபபூவும், விருஷணத்திற்குப் பனஙகாயும், வைத்துச் சந்தனபுஷ்பங்களால் அலங்கரித்துச்சாஸ்திரப்படி கிருத்தியம் செய்தல்வேண்டும் இஙஙனம்செய்யின் துன்மரணமடைந்தவன் நற்கதியடைவான். இவ்விதம்கருமம்செய்யும்புத்திரனுக்குப் பத்துதினமும் மற்ற தாயத்தார்களுக்கு மூன்றுதினமும்ஆசௌசம்உளது என்றருளிப்பின்னு மருளுகின்றனன்.

இருபத்தேழாம் அத்தியாயம் - முற்றிற்று.

ஸ்ரீராமதாசர்கள் திருவடிகளே சரணம்.



# இருபத்தெட்டாம அத்தியாயம்



சூதமா முனிவர், மறந்தும் புறந்தொழாத திருமாலடியார்களாகிய நைமிசாரணிய வாசிகளே! பின்னாச் சர்வஜ்ஞன், எம்மையாளுடையபிரானைநோக்கி. வைனதேயா! விருஷோற்சர்க்கத்தைக்குறித்துவேறொருபிரகாரம் சொல்லுகின்றேன்கேண்மோ? முன்னமேசொன்னதினங்களில் ஒன்றில்ஸ்தலசுத்தி செய்தபின்னர் அக்கினி பிரதிஷ்டைசெய்து ஒரேவருணமுடைய காளைக்கன்று ஒன்றும்அதற்குச்சிறிதாய்க்கடாரிக்கன்று ஒன்றும்கொணர்ந்து அவ்விரண்டனையும் மஞ்சனமாட்டி வஸ்திராபரணங்களால் அலங்கரித்துவாலில்தருப்பணம்செய்து விடுத்துநாங்கிராத்தம்

செய்து. ஒருபட்சம் வரையிலும் பிராமணர்களுக்குப் போசனம் செய்வித்து வெள்ளி-திலம் உதககும்பம் வஸ்திரம் ஆகிய இவற்றைத் தானம் செய்யின் நூற்றொரு தலைமுறையிலுள்ளோர் சுவர்க்கம்புகுவர் என்றோதி இதனைக்காமிய விருஷோற்சர்க்கம் என்பர் என்று பகர்ந்தருளினன்.

இருபத்தெட்டாம் அத்தியாயம் முற்றிற்று

ஸ்ரீராமதாசர்கள் திருவடிகளே சரணம்.

—0—

# இருபத்தொன்பதாம் அத்தியாயம்



வியாசர் மாணாக்கர் ஸ்ரீ ஹரிகதா சங்கீர்த்தன சீலர்களே! புருஷோத்தமன் வைனதேயா! சீவன் இன்பம் துன்பம் அடைவதாக்கு அவன் செய்த நல்வினை தீவினைகளே காரணமாகவும் சீவர் பலராயிருக்க ஒருசன்மத்தில் ஒருசீவனால்செய்யப்பட்டகருமம் தன்னைச்செய்தவன் இன்னானென்று எங்ஙனம் அறிந்துமறுசன்மத்தில அவனையெப்படியடையும்? எனவினவப்படவேண்டாம ஓரிடத்தில ஆனகள்பலவாயிருக்கக கன்றுதன்னையீன்ற பசுவையே அடைதல்போலக்கருமம் தன்னைச்செய்தவனையாவனோ? அவனையே தவிராது அடையும்வைனதேயா! பூதானம்செய்தலினும் உத்தமதானம்வேறில்லை மெய்ப்பேசுதலினும். புண்ணியம்வேறில்லைபொய்சொல்வதினும பொய்ப்பத்திரமெழுதுதலினும் பாபமவேறில்லை. பூமிமுதற்கடவுளாகிய ஸ்ரீவிஷ்ணுசம்பந்தியாகலாலும்காபிகள்சூரியனுடையதிருக்குமாரத்திகளாலும் சுவர்ணமும் அக்கினியின்மகவாகலாலும், அம்மூன்றனையும்தானஞ்செய்வோன்மூன்றுலோகங்களையும் உடையவனாய்த்தானம்செய்தபலன் அடைவன் ஒருகோவினுடையதோலின் அளவுஒருவன்பூதானம்செய்யினும் அவன்மகாபாபத்தினின்றும் நீங்குவன். பூதானம்கொடுத்து அ

வாயினால் அப்பூமியை அபகரிக்கஎத்தனித்தவனும், தானஞ்சொ டுத்தபூமியின் பலனைத் தானம்வாங்கினேன் அடையாமல் கெடுத் தவனும் தானங்கொடுத்தநிலத்தின்பேரில் ஒருவன்வழக்கிட்டா ல் தானம்வாங்கினவனுக்கு உதவிசெய்யாதவனும், பிரளயகாலம் வரையிலும் நரகவாசஞ்செய்வர். ஒருவன் ஒருவிருத்தியால்வாழ் ந்துகொண் டிருக்க, அவ்விருத்தியைக்கெடுத்தவன் ஆயிரங்கோ வைக்கொன்றதோஷமடைவன். ஒருவனுக்கு ஒரு சீவனஞ்செய் வித்தவன் லட்சங்கோதானஞ்செய்தபலன்அடைவன். நூறுகோ தானஞ் செய்தலினும் ஒரு கோவைகோல்கொண்டு ஓச்சாமலு ம், களவாடாமலுமிருத்தல் நலமாம். ஒருவன்ஒருகோவைக்கொ ன்று நூறுகோதானஞ்செய்யினும் கொன்றபாபமே மேலாகும். நல்லசீலனும் நான்மறைபயின்ற நாவினனும் உள்ள ஒருஉத்தம பிராமணனை வழிபட்டுக்கிருஷி கிருத்தியங்களில் அவனுக்குச்சி ந்தையில்லாமற்செய்தல் அசுவமேதஞ் செய்தலினுமிக்கவிசே டமாம், யாகஞ்செய்யின் அப்பிரத்தியட்சராகிய சுரர் உளமுவக் கின்றனர் இதனால்பிரத்தியட்சனாகிய பூசுரன் உவக்கின்றான்அ ரசன் பிராமணனுடைய பொருளையபகரித்துச் சதுரங்கசேனை சேர்த்து யுத்தஞ்செய்யின் அச்சேனை யுத்தபூமியில் ஒருங்குமடி யும் தன்னாலேனும்,தனது முன்னோர்களாலேனும் விப்பிரனுக் குக் கொடுத்தபொருளை அபகரிக்கலாகாது அதனையபகரித்த வன் அறுபதினாயிர வருடமதிக்கிருமியாய்ப் பிறப்பான். பொரு ள்மேலாசையால் கபடத்தோடு கண்பாடிப் பிராமணர்க்குரிய தை அபகரித்தவன் நெடுங்காலஞ்சிறையத்திலுறைவன் இரும் புப்பொடியேனும், கருங்கற்பொடியேனும், விஷமேனு முண்டு ஒரு வினையாலே சீரணம் செய்து கொள்ளினும், கொள்ளலாம். பிராமணருடைய பொருளை உண்டுசீரணம் செய்தலுக்குத் திரி லோகத்திலும் ஒருவினையுமில்லது. தெய்வத்தின்பொருளையபக ரித்தாலும். வேதியர்பொருளையபகரித்தாலும், அவ்விப்பிரரை அவமதித்தாலும், குலநாசமடையும். சாஸ்திரப் பயிற்சியும், ஒ ழுக்கமுமுடைய உத்தமபிராமணனையாராதித்து, அவர்றைச் சி றிதும் அறியாதபிராமணனையவமதித்தால், தோஷமில்லது. சத்பி ராமணனுக்குக் கொடுத்தல் அக்கினியில் ஆகுதிசெய்தலை யொக் கும். அசத்பிராமணனுக்குக் கொடுத்தல்சாம்பலில் ஆகுதிசெய்

தலை போகும் சங்கராந்தி புண்ணியகாலத்தில் தானதருமங்க ள் செய்யின் அவற்றை ஆதித்தன் அளவில்லாமல் விருத்தி செ ய்கின்றான இருபிறப்பாளருக்குறிய அறுதொழில்களுள். ஓதுவி த்தலும்யாகம்செப்பவித்தலும், தானமரற்றலுமஆகியமுத்தொ ழில்களில தானமவாஙகலாலேஅதிக தோஷமிலது. வாங்குதலா லுளதாகும பாபம்ஸ்நான சபங்களால்நிவாத்தியாகும மற்றஇர ண்டாலவருமபாபமநிவர்த்தியடைதலஅரிதாகும ஒழுக்கத்தினி ன்று நீஙகாமலும, பரான்னமபுசியாமலும, உள்ளபிராமணன் க டலபுடைசுற்றிய புவிமுழுதும் தானம வாங்கினும அலன்தோ ஷத்திற்குட்படாமல் தானம கொடுத்தவனுக்கும விசேடபலனை யும உண்டாககுவான் என்றருளிப் பின்னும கூறுகின்றனன்.

இருபத்தொன்பதாம அத்தியாயம் முற்றிறறு

ஸ்ரீராமதாசாகள் திருவடிகளே சரணம்

---

# முப்பதாம் அத்தியாயம்

---

சூத புராணிகா துவாத சேர்ந்தவ புண்டரீக தரித்த திரு மேனியை யுடைய பரம வைதிகர்களே ? வாசுதேவன் வி நதை புத்திரனை நோக்கி, விநாயகா ! நான்கு வயதுக்கு மேல் பன்னிரண்டு வயது வரையில குழந்தைகள் செய்யும பாபம, தாய தந்தை யரைச் சாரும் தாய் தந்தைய ரிலராயின் அககு ழந்தைகளை ரட்சிக கின்றவாகளைச் சாரும, அப்பாபத்துக்கா க அவர்கள் பிராயச் சித்தம செய்துக் கொள்ள வேண்டும கு ழந்தை களுக்குப் பாப மில்லை. குழந்தைகளை அரசன் தண்டிக் க லாகாது. அதுநிற்க பிணியால் பீடிக்கப்பட்டு ஸ்நானம செயய க் கூடாம லிருக்கின்றவனுககு ஆசௌசம நேர்ந்தால் ஆசௌ சமில்லா னொருவன் பத்தாவர்த்தி ஸ்நானம் செய்து ஓராவாத்தி அவனைத் தீண்டிமீண்டும அவ்விதமபத்துஸ்நானமபத்தாவாத்தி

செய்து,பத்தாவர்த்தி தீண்டிவாறனுல் அவன்சுத்தனுகின்ருன், பகவான்இலனென்று குழறுகின்றவன்யாவனே ? அவன்மகாபாபிபாவன் அவனுக்கும், துன்மரணமடைந்தவனுக்கும் உத்திரகிரியைசெய்யவேண்டுவதில்லை. அங்ஙனம் இறந்தவன்யாகம்செய்தவனுயின் அக்கினியைநீரிலும் ஔபாசனத்தைநாற்சந்தியிலும், பாத்திரங்களை நெருப்பிலும் எறிதல்வேண்டும் பின்பு வருடம் முடிகின்ற காலத்தில தயையுடைய புத்திரன் சுக்கில பட்சஏகாதசியில ஸ்ரீ விஷ்ணுவையும் யமனையும ஆராதித்து மரித்தவனைக் குறித்துப் பததுப்பிண்டங்கள்போட்டு. அவற்றைஎடுத்துகொண்டு சென்று புனலில்போட்டு, தெற்குமுகமாய் நின்றுமரித்தவன்பெயரை மூன்றுவர்த்திஇரைந்துசொல்லாநின்று நீராடி, இலலமனுகி உபவாசமிருந்து மறுதினம் வேதசாஸ்திரமோதிய ஏழுஅல்லது ஐந்து பிராமணர்களை வரித்து மத்தியானத்தில வடக்குமுகமாய் அவர்களை ஆசனத்தில்இருத்தி ஆராதித்துப் பீதகவாடைப்பிரானைப்பூசிதது அப்பிரமணர்களுக்குப் போசனம் செய்வித்து, ஸ்ரீ விஷ்ணுவுக்கும் பிரமனுக்கும் உருத்திரனுக்கும் தூதர்களுடன் யமனுக்கும், மரித்தவனுக்கும் கிரமமாய் ஐந்துபிண்டம் வைத்துத் துஞ்சினவனுடையபெயரையும். கோத்திரத்தையும் சொல்லி, ஸ்ரீவிஷ்ணுநாமங்களையுச்சரித்து, மாய்ந்தவன் பிதிரரோடு சேராமையால, அவனது ஐந்தாம் பிண்டத்தை எடுத்தகறறிப்பின்பு தண்டம்சமர்ப்பித்துத்தானங்கள் கொடுத்து மேற்சொன்ன பிராமணர்களில்மரித்தவனதுஸ்தானத்திலிருக்கின்றவனுக்கு அதிகமதக்ஷிணை கொடுத்துப் பகவான் திருப்தியடைந்து கடாக்ஷிக்கவேண்டுமென்று பிரார்த்தித்து, அந்தணர்களைப் பிரதக்ஷிணநமஸ்காரம் செய்துபினபுதெற்குமுகமாய் இருந்து தருப்பணம்செய்தல்வேணடும். இன்னும் விசேடமாய்ச் செய்யவேண்டுமென்று புத்திரனுக்கு மனமிருந்தால சுவர்ணத்தினுல் சாப்பம்செய்து சாஸ்திரத்தில்சொல்லியபடி யாவும்செயயலாம் என்றருளிவருடசிரார்த்தம்செய்யவேண்டியவிதி கூறியருளுவான்.

முப்பதாம் அத்திபாயம் முற்றிற்று

ஸ்ரீ ராமதாசர்கள் திருவடிகளே சரணம்.

——0——

# முப்பத்தொன்றும் அத்தியாயம்.

சூதர், திருமாலடியார்களே ! சாட்குண்ணியபரமன்பட்சிராஜனைப்பார்த்துக் காசியபதனயா ! புத்திரன்முதலியோர்தாய்தந்தையா முதலியோரைக் குறித்து வருடமதோறும் சிரார்த்த

ம்செய்தல் வேணடும் தந்தைதன் புத்திரனுக்கும், தமயன் தன
து தம்பிக்கும், சிராத்தம்செய்யும்படி நேரிட்டால் தலை முறையி
லுள்ளோரைக் குறிக்காமல் இறந்தவனைக் குறித்து மாத்திரம்
செய்தல் வேண்டும் புத்திரன் தாய்தந்தையருக்கு செய்வானுயி
ன் மூன்றுதலை முறையைக்குறித்தே செய்தல்வேணடும் ஆசௌ
சம், விருத்தி சூதகமிவை நேரிட்டால் அவைநீங்கிய தினத்தில
சிராத்தம் செய்தல்வேண்டும் மரித்தவனுக்குக் கிருத்தியம்செய்
யும்போதே சபிண்டீகரணம் செய்யாமல மாசிகமாத்திரம் செய்
துவரும்போது ஆசௌசம் நேர்ந்து மாசிகம் நிறுத்தப்பட்டால்
அம்மாசிகத்தை மறுமாசிகத்தோடு சேர்த்துசெய்தல்வேண்டும்
சபிண்டீகரணம்செய்து மாசிகம் செய்யப்பட்டுவந்தால் ஆசௌ
சத்தில் நின்றமாசிகத்தை அவ்வாசௌசம் நீங்கியதினத்தில செ
ய்யலாம் பூர்வாபரை, புத்திரன் சிரார்த்தம்செய்யும்படி நேரி
ட்டால் சபிண்ட விதானமாய் செய்தல்வேணடும் ஒரேகாலத்தி
ல் தேசாந்திரத்தில பலர்துஞ்சினரென்று கேள்வியுற்றால் யாவ
ன் இறந்தானென்று முன்புகேட்டானோ அவனுக்கு முன்பும் மற்
றவருக்குப் பின்பும் கிரியைசெய்தல்வேணடும் மரித்ததினம் தெ
ரியாமல் செத்தானென்று மாத்திரம் கேள்விபட்டால் அமாவாசை
யில் கருமம் செய்தல்வேணடும் தினம் தெரிந்துமாதம் தெரியாவிட்
டால், ஆடி, புரட்டாசி மார்கழி, மாசி, இந்த மாதங்களில் கிருஷ்
ணபக்ஷத்தில் அஷ்டமியிலேனும், அமாவாசையிலேனும் செய்ய
லாம், தேசாந்திரத்தில் ஒருவன் இறந்ததினமாவது மாசமாவது தெ
ரியாவிடின் யாத்திரைக்கு அவன் புறப்பட்ட திதியில் செய்தல்வே
ண்டும். ஒருகுடும்பத்துக்குத் தலைவன் அவனைச்சேர்ந்தவரோடு
தேசாந்தரம் சென்றகாலையில் அவர்களொருவனிறந்து அத்தலைவ
ன் ஆங்கு ஆசௌசம் அநுஷ்டித்துப் பின்புமனைக்கு வருவானேல்,
அந்தகாலத்தில்வீட்டிலிருந்த அவன்புத்திரன்வேறொருவருக்
குச் சிராத்தம்செய்துகொண்டிருந்தால அத்தலைவன்சிராத்த
ம் செய்துமுடியும்வரையிலும், தூரத்திலிருந்து பின்பு வருதல்
வேண்டும் சிராத்தத்துக்கு வரிக்கப்பட்ட பிராமணன்மேற்சொ
ன்ன சமாசாரத்தை முன்னமே புணர்ந்து சிராத்தம் செய்கின்ற
புத்திரனுக்கு அதனை சொல்லாமல் சிராத்தத்தில் சாப்பிட்டால்
தோஷம் அப்பிராமணனை மேயதாகும் தாய் தந்தையர் இறந்த
திதியை மறந்துவிட்டால் அஷ்டமியிலேனும் ஏகாதசியிலேனும்,
அமாவாசையிலேனும் செய்தல்வேணடும், செய்யாமல் விடலாகா
து சிராத்தம்செய்யாமற் விடுகின்றவன் யாவனோ? அவனேசண
டாளன் ஒருவன்மரிக்கும் காலம்வரையிலும் நாள்தோறும் நித்தி
ய சிராத்தம செய்வனேல் அவனுக்கும்க்கலமுண்டாகும், இற

ந்தவனைக்குறித்துதல்லாமல் உயிரோடுள்ளவன் தனஷோர்த்த மாப்ச்செய்யத் தக்கதாகிய இந்த நித்தியபாராத்தத்துக்கு விதியொன்றுமில்லது, ஆவாகனமுமில்லது சாப்பிடுகின்ற பிராமணனுக்கும் யாதொருநிர்ம்மந்த விதியுமில்லது தினந்தோறும் ஒருபிராமணனுக்குப்போசனம் செய்வித்தல்யாதத்திரமேன்றருளி, ஏ கருடா! நீவினவியவற்றிற்கெல்லாம்விடைதந்தோம் இனிமேலேதேனும் வினவுவாயேல் செப்புகின்றேம் எனறுபகர்ந்தருளினன்.

முப்பத்தொன்றும் அததியாயம முற்றிற்று

ஸ்ரீராமதாசர்கள் திருவடிகளே சரணம்.

---

# முப்பத்திரண்டாம் அத்தியாயம்

ஸ்ரீ வியாசர்மாணாக்கர் பகவத்திருவாராதனபரர்களே! கருடபகவான் வாசுதேவனைத் தொழுது சுவாமி! உலகிலதோன்றுகின்றசீவரில இந்தச்சீவன பூர்வசன்மத்தில இன்னபாபம்செய்தவன் இந்தச்சீவன் இன்னபுண்ணியம் செய்தவன்என்று பகுத்தறியலாகுமா? பாபம்செய்தவனைத் தண்டிப்பார் யமனன்றிவேறொருவருமில்லரோ பகர்ந்தருள்க வெனலும், பக்தவச்சலன், காசியபதனயா இந்தச்சிவன் இன்னபாபம் செய்தவனென்று நன்கு அறியலாகும்சிஷ்டன் தவறிப்பாபம்செய்யவேனேல், அவனை அவனுடைய ஆசாரியன் சிட்சிக்கின்றனன், துஷ்டன் ஆசாரியன் ஆணையிலும், அடங்காதுகால் அவனை அரசன் தண்டிக்கின்றனன், சிஷ்டனாயினும் துஷ்டனாயினும் யாவருமுணராவண்ணம், பாபம்செய்யின் யமன்றனதூதனடிக்கின்றனன் பாபம்செய்தவன் அப்பாப நிவர்த்தியின் பொருட்டுப்பிராயச்சித்தம் செய்யாமல் மரிப்பனேல், அவன்யமலோகத்தில் நெடுங்காலம் நரகவாசஞ்செய்து, நாய்நரிமுதலாகிய இழிந்தசன்மமடைந்துபின்புயானிடசன்மம்பெற்று முன்மாண்ட சன்மத்தில செய்தபாவத்தை யாவரும் அறியத் தக்க குறியுடையோனாவன் வார்த்தைசொல்லவொண்ணாமல் நெஞ்சடைப்புடையானைப் பூர்வசன்மத்திற் பொய்சொல்லி நரகவாசம் செய்தவனென்றும், மூங்கையானைச் சுரபிவிஷயத்தில் இழுதை நீசுழ்ததினவனென்றும், பிறன் இல்லத்தைக்கொளுத்தினவனென்றும், குஷ்டரோகியைப்பிரமகத்திசெய்தவனென்றும், புழுக்குற்ற பல்லுடையானை மத்தியபானம் செய்தவனென்றும், புழுக்குற்றநகம் அடைந்தவனைச்சுவர்ணம் திருடினவனென்றும், விகாரமுள்ள மேனியுடையானைக் குருஸ்திரிகமனம் செய்தவனென்றும் சண்டாளசன்மமடைந்தவனைத்தன்சாதிப்பரஸ்திரியைச் சேர்ந்தவனென்றும் வறிஞனை ஒருவனுக்கும் ஒன்றும் கொடாதவனென்றும் உணர்க.

கருடா ! பதிதனுக்கும் அசத்சூத்திரனுக்கும் புரோகிதனு யிருந்தவன் பன்றிசன்மமடைகின்றனன் ஒருகிராமத்துக்குப்பு ரோகிதர் பலருளரேல் பாபம்முழுதும் ஒருவனையே சாராமல்பு ரோகிதரெல்லாரையும் சாரும் அங்ஙனமின்றி ஒருகிராமத்துக்கு ப்புரோகிதன் ஒருவனே இருப்பானேல் பாபம்முழுதும்அவனை யேசார்ந்து அப்புரோகிதனை கழுதைச்சன்ம மடைகின்றனன்ஸ் நானமும்சந்தியும், தேவதாராதனமுஞ்செய்யாமல்புசித்தவன்கா க்கைச்சன்ம மடைகின்றனன் இல்லம் அல்லதுப்பந்தல்முதலிய இ டங்களிலன்றிவெளியிலிருந்து உண்டவன் மனிதசஞ்சாரமில்லா த ஆரணியத்தில் குரங்குச்சன்ம மடைகின்றனன். யாரும்அஞ்ச அதட்டிப் பேசினவன்பூனைச்சன்மமடைகின்றனன் செடிகளைக் கொளுத்தினவன் மின்மினிச் சனமம் அடைகின்றனன் பிரா மணருக்குக நியபதார்த்தங்கொடுத்தவனும்சூத்திரஸ்திரீயைப் புணர்ந்த பிராமணனும் பண்டிபிறக்குமாருதுச்சன்மம்அடைகி ன்றனர் விப்பிரனுக்குப் பழஞ்சோறு கொடுத்தவன் கருங்குர ங்குச்சன்ம மடைகின்றனன், காரணமின்றியாரையும்விரோதித் தவன்குருடனாய்ப்பிறக்கின்றவன். புஸ்தகம் திருடினவன்பிறந் து சிறிதுகாலத்துக் கப்புறம் குருடனாகின்றனன் பிராமணகுடு ம்பத்தை நாசஞ்செய்தவன் பெறுகின்ற மகவையெல்லாம் இழ க்கின்றனன் பசித்துச்சோறுதாவென்றவனுக்குஅன்னங்கொ டாதவன் மகவைப்பெறாதபாவியாகின்றான் ஆடைதிருடினவன் உடும்புச்சன்ம மடைகின்றான், பிறருண்டுமரிக்கவிஷம் கொடுத் தவன்சர்ப்பமாய்ப் பிறக்கின்றான், சந்நியாசாச்சிரமம்பெற்றவனு டைய மனைவியைப் புணர்ந்தவன் பிசாசசன்மடைகின்றான் ம ற்ற அந்நிய ஸ்திரீகளைக் கூடினவன் இளவயதிலிறக்கின்றான்கு ருஸ்திரீயைஅணையஇச்சித்தவன் ஓந்திச்சன்மமடைகின்றான்த னக்குக்கீழ்ச்சாதிப்பெண்ணைக்கூடினவன்செந்நாய்ச்சன்மமடை கின்றான். குளம்வெட்டிக்கிணறுஎடுத்துப்பின்பு அவற்றைத்தூ ர்த்தவன மீன்சன்மமடைகின்றான் நீதிவிரோதம்செய்தவன்கோ ட்டான்சன்மமடைகின்றான் ஏகோதிஷ்டமசாப்பிட்டவன்நாய் ச்சன்மமடைகின்றான்கத்தாபகாரம்செய்தவன்நரிச்சன்மமடைகி ன்றான் இராஜஸ்திரீயைப்புணர்ந்தவன்இழிச்சன்மமடைகின்று ன் வைதியருக்குத்தோஷம் கற்பித்தவன் ஆமைச்சன்மமடைகின் றான் மூன்று வருஷம் வரையிலும் தக்ஷிணை பெற்று ஆராதன ம்செய் தவனும் வேத மோது வித்தவனும் சண்டாள சன்ம ம டைக்கின்றனர். கனிகாய்பூவிருக்கின்ற விருக்ஷங்களை வெட்டி

னவன் ஒருகதியுமில்லாதவனுகின்றான் வாசனைபொருளைத் திருடினவன் கெட்டநாற்றமுடையசரீரமடைகின்றான். பிறனுடைய எப்பொருளையேனும் கவர்ந்தவன் புழு முதலிய இழிசன்ம மடைகின்றான் யமபுரிக்குச்செல்லுமார்க்கத்தில் சீயாலும். அரத்தத்தாலும் பலவகைமிருகங்களாலும் முதலைகளாலும், கீடங்களாலும் நிறைந்தவைதரணியென்ற ஒருநதியுளதென்றோமே! அந்நதியில் உருக்கியநெய்போல ஜலநிற்பெருகாநின்றது. மகாபாபங்களைச்செய்தவர்களுக்கெல்லாம் அந்நதிஸ்தானமாயிராநின்றது எவற்றாலும் நம்மையொப்பவனும் ஒருவனுளனோவென்றுசெருக்குற்றவனும், தாய்தந்தையரையுமகுருவையும் புரோகிதனையும் அவமதித்தவனுந் தன்னைநேசித்தவனுக்கும் தனக்குச்சீவனம் செய்வித்தவனுக்கும், ஸ்திரிகளுக்கும், குழந்தைகளுக்கும் கண் முதலிய இந்திரியக் குறைவுள்ளவருக்கும்? தீங்குசெய்தவனும், விவாகவிஷயத்திலும் பிராமணவிஷயத்திலும் தானவிஷயத்திலும் தருமவிஷயத்திலும், மாறுபுரிந்தவனும் பிராமணருக்கு ஏதேனும் ஒன்றுதருகின்றோமென்றுசொல்லி, இன்றுநாளையென்று அலைவித்தவனும், புரோகிதன் மனைவியைப் புணர்ந்தவனும் ஸ்ரீமத்ராமயண பாரதபாகவதங்கள்படிக்குமிடத்தில் வீண்வார்த்தைபேசினவனும் மணம்புரியுங்காலை கன்னிகைகளுக்குத்தோஷம்கற்பித்தவனும், பசுமுதலியமிருகங்களுக்குச்சமயாயதீர்த்தம்கொடாமல் தனக்குரியவற்றிற்கு, மிகுதியாயும் பிறனுக்குரியவற்றிற்குக்குறைவாயும்கொடுத்தவனும் ஒருபொருளையொருவனுக்குக்கொடுத்து. கொடுத்தோமேயென்றுபின்பு தாக்கித்தவனும், பிராமணனுக் குறியகருமாநுஷ்டானங்களைச்செய்த ருத்திரனும் கருமாநுஷ்டானங்களை விட்டுப்புலாலுண்ட பிராமணனும்பகவானிலன என்றவனும எப்போதும்பிறரைமுனிந்தவனும், பிறனபழிகூறினவனும், அந்நதியிலேயேமுழுகி மிருகங்களாலும், முதலைகளாலும், கீடங்களாலும், துன்பப்படுவர்.

தார்ட்சியா! தீவினைசெய்யாமல் நல்வினைசெய்தசீவன் இறுதியுற்றபின்புசுவர்க்கவாசம்செய்து நல்லக்ஷேத்திரத்தில உத்தமகுலத்தில் சர்வசாஸ்திர சம்பன்னனும் அதிகம்தனமுடையனுமாயப்பிறந்துவாழ்வன். தந்தைமரித்தகாலை ஆசௌசம்நீங்குவதற்குள் புத்திரன் இப்புராணத்தைக்கேட்பனேல், அத்தந்தைநிரதிசய இன்பவீடாகிய நம்முலகுளய்துவன்தாம்மரித்தகாலைகேட்பேனேல் அத்தாய்புருடசன்மமடைந்துசுவர்க்கம். சார்வாளபுத்திராகளும் நற்கதியடைவார்கள் சங்கிராந்தியிலும்விஷுவென்னும் புண்யதினத்திலும், கிரகணத்திலும் சிரார்த்ததினத்திலும்

இப்புராணத்தைப்படிப்போரும், கேட்போரும படிப்பிப்போரும், இறுதியில்நல்லுலகுசேர்வர் அவர்களுடையபிதிரர்களும் உத்தமலோகமடைவார்கள் கோடிகன்னிகாதானம் செய்தலாலும் நூறு ஆவர்த்திசோடசமகாதானஞ்செய்தலாலும் கயாசிரார்த்தம் செய்தலாலும்வரும்புண்ணியம் இப்புராணத்தைக்கேட்டால் உளதாகும், சீவர்களுக்குயமலோகபயத்தைநிவர்த்திப்பதும், மோக்ஷமார்க்கத்தைத் தெரிவிப்பதும் ஆகிய இப்புராணம் உலகநன்மையின்பொருட்டு நினக்கு நம்மால் சொல்லப்பட்டதென்று பததராவி திருவாய்மலர்ந்தருளின பின்னர்க்கருடபகவான் பரமகாருணியனாகிய பகவானை வலம் வந்துதிருவடியைத் தொழுதுவேதாவுக்கு வேதமோதியருளிய திருநாவால் சாவேசன் புராணம் சொல்லியருளப் பெற்றேனே, எத்தவம்புரிந்தேனோ? எனமகிழ்வுற்றனன். சூதர் நைமிசாரணிய வாசிகளே புராண சிரவணம் செய்யவிருப்பிய நுங்கட்கு அறிந்தவாறு சொன்னேனென்று இளைத்தி, ஸ்ரீஹரிநாமங்களைப் புகன்றிருந்தனர். அக்காலை புராணசிரவணஞ்செய்தசௌனகாதி மகருஷிகளெல்லாரும் ஆநந்தவேலையில்ஆழ்ந்துபுராணிகனைநோக்கிசூதமாமுனிவரே ! அடியோங்களிடத்தில் கருணைசெய்துஇப்புராணம் பகர்ந்தருளினீர்அநேகபுராணங்கள் தேவர்முகமாய்க்கேட்டிருக்கின்றோம்; சீவனுக்கு உறுதிகற்பிக்கும் புராணம்இதனினும் மற்றொன்றில்லது, தேவருக்கு விசேஷமாய்ச் சமர்ப்பித்தல் வேண்டுமென்ற எண்ணம் எங்கட்குத் திண்ணமாயுளது, நங்கள் நிலைமை தேவருக்குத் தெரியாததன்று யாங்கள் எல்லாம் எளியேமாகவே யிருக்கின்றோம் என்றுபுகன்று கைநீர் அடிநீர்உண்ணீர் - கொடுத்துப்போற்றினர் - அவருள்ஒருவர் வெறுமனே புராணம்கேட்டலாகாதென்று புராணிகருக்கு ஒருகடகம்கொடுத்தனர், ஒருவர் மரவுரிகொடுத்தனர் ஒருவர்புலித் தோல்கொடுத்தனர். ஒருவர்பூணூல்கொடுத்தனர், ஒருவர் யாதைக்கொடுக்கலாமென்று சற்றே ஆலோசித்துக் குசைப்புல் கொடுத்தனர். ஒருவர்சூதரைப் போலப் புராணம் சொல்லுவோர் திரிலோகத்திலும் உளரோவென்று வாயாரப் புகழ்ந்தனர் ஒருவர் பலமுறைதண்டம்சமர்ப்பித்தனர், பின்னர் யாவரும் புராணிகரைவலம்வந்து தண்டம்சமர்ப்பித்துத் தத்தம் ஆச்சிரமமேகினர்.

முப்பத்திரண்டாம் அத்தியாயம் முற்றிற்று

ஸ்ரீராமதாசர்கள் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ கருடபுராண வசனம் முற்றுப்பெற்றது.